


# திருநெல்லை

ஆன்மீகத் திங்களிதழ்

ஜய - மாசி - 2015 - பிப்ரவரி

32

உ
சிவமயம்

# திருநெல்லை

## ஆன்மீகத் திங்களிதழ்

ஜய – மாசி – 2015 – பிப்ரவரி இதழ் – 32

சிறப்பாசிரியர் :
சீர் வளர் சீர்
**மெய்யப்ப ஞான தேசிக சுவாமிகள்**

ஆசிரியர் குழு :
காப்பியக் கவிஞர் **நா. மீனவன்**
முனைவர். பேரா. **நா. வள்ளி**
பேரா. **நா. சுப்பிரமணியன்**

ஆலோசகர் :
பேரா. தமிழாகரர்.
**தெ. முருகசாமி**

பதிப்பாசிரியர் :
பேரா. **ம. கார்மேகம்**

வெளியீடு :
**கோவிலூர் மடாலயம்**
கோவிலூர் - 630 307.
மானகிரி (அஞ்சல்),
(வழி) காரைக்குடி
சிவகங்கை மாவட்டம்
போன் : 04565 - 236846

அச்சிட்டோர் :
**திருமகள் அச்சகம்**
"ஜெய சௌந்தர்",
7G. ஜவஹர் தெரு, நியூ டவுன்
காரைக்குடி - 630 001.

**பொருளடக்கம்**



தனி இதழ் ரூ 10.00
ஆண்டுச் சந்தா ரூ 100.00




உ
சிவமயம்

# இறை வணக்கம்

வெண்மதிப் பிறையொடு விளங்குவார் சடையன்
வெண்தலை ஓட்டுப் பிரம கபாலி
விண்ணவர் தலைவன் வேதநாயகனார்
விடம்படு கண்டன் விடைவா கனத்தன்

கண்மணி அரவு கலந்தணி நாதன்
கந்தனின் தாதை கணிச்சிப் படையன்
கயல்விழி நெல்லை காதலன் நெற்றிக்
கண்ணுடை வள்ளல் கனக மேனியில்

வெண்ணீ றணிந்த வித்தகன் அன்று
விரும்பியிச் சமிவனம் விழைந்தமர் கடவுள்
வெந்தழல் ஆடி விழுமணி மார்பன்
விரைமலர்க் கொன்றை விரும்பிய தாரன்

கண்மணி நெல்லை தன்னிரு தாள்கள்
கதியென வாழ்வோர் கவலைகள் மாறும்
காளி உமையவள் கமழ்மலர்க் குழலி
கவலைநோய் மாற்றும் திருவருள் மருந்தே!

காப்பியக் கவிஞர் கவிமாமணி நற்றமிழ் நாவலர். நா. மீனவன்

# ஆசியுரை

**சீர் வளர் சீர் மெய்யப்ப ஞான தேசிக சுவாமிகள்**

அண்மையில் கோவிலூரில் தமிழ்நாடு கெமிக்கல் தொழிற்சாலையில் ஏற்பட்ட விபத்து கோவிலூர் மக்களுக்கும். நம்முடைய மடம். அறக் கட்டளைகள் சார்ந்த கல்வி நிறுவனங்கள் யாவற்றிற்கும் எச்சரிக்கை மணியாகும்.

இந்த வேதியியல் தொழிற்சாலையைக் குறித்து நம்முடைய மடாலயம் சார்பில் தெய்வத்திரு நாச்சியப்ப சுவாமிகள் காலத்திலேயே விரிவான அறிக்கைகளும். விண்ணப்பங்களும் தொடர்ந்து அளிக்கப்பட்டு வந்தன. ஊர் மக்களும் அவ்வப்பபோது அதனுடைய தீமைகளைக் குறித்துப் போராடி வந்திருக்கிறார்கள்; என்றாலும் அந்த நிறுவனத்தினர் எந்தவிதமான அக்கறையும் காட்டவில்லை; மாற்றுச் செயல்பாடுகளுக்கும் ஏற்பாடு செய்யவில்லை. அவர்களுடைய வேதியியல் கழிவு சுத்திகரிக்கப் படாமலேயே வெளியேற்றப்படுவதால் சுற்றுப்புறத்தினுடைய நீர் மாசுபடுகிறது. காற்று மாசுபடுகிறது. பூமி தன்னுடைய வளத்தை இழந்து பாலைவனமாக மாறி வருகிறது. இவையனைத்தும் இது சம்பந்தப்பட்ட அனைவருக்கும் தெரிந்திருந்தும் நிறுவனத்தார்களின் பேராசையாலும் அளவிடற்கரிய தன்னலத்தாலும் நேர்ந்துள்ளது.

தனி ஒரு மனிதன் வாழ்விலே முன்னேற விருப்பம், முயற்சி, தன்னலம் என்பவை அவசியமானவையே. பிறக்கும் குழந்தை இயற்கையிலேயே எல்லாம் தனக்கே என்ற உணர்வோடு இருக்கும். ஆனால் வளர வளர, சகோதர, சகோதரிகளுடன் பழகி மற்ற உறவினர்கள் தொடர்பாலே சுயநலம் குறைந்து பகிர்ந்து கொள்ளும் மனப்பாங்கு வளரும். இந்த மனப்பாங்கு இருந்தால் மட்டுமே அவர்கள் மனித இனமாகக் கருதப்படுவார்கள். அளவுக்கு

மீறிய சுயநலம் கொலைக் குற்றத்திற்கு மேலான குற்றம். தனி மனிதன் உயர்விற்காக நூறு பேர் வாழ்வைச் சிதைப்பது சமுதாயக் கொலைக்கு ஒப்பாகும். ஊருணியிலே நஞ்சு கலப்பதற்கு இணையாகும். யார் இருந்தாலும் செத்தாலும் பரவாயில்லை, தான் நினைத்தது நிறைவேற வேண்டும், என்னுடைய வளம் பெருக வேண்டும் என்று நினைப்பவன் மனிதன் அல்ல. கொள்ளையன்.

நம்முடைய கல்வி நிறுவனங்களிலே மாணவர்கள், ஆசிரியர்கள், அலுவலர்கள் ஏறக்குறைய 2500 பேர் இருக்கிறார்கள். கிராம மக்கள் ஏறக்குறைய 2500 பேர் வாழ்கின்றார்கள். இவர்கள் அனைவருடைய உடல் நலத்தையும், வாழ்க்கை வளத்தையும் கெடுக்கின்ற இந்தச் சுயநல நிறுவனத்தை அதிகார வர்க்கம் ஏனோ கண்டுகொள்ளவில்லை. இந்தச் சுயநலப்போக்கு மிகவும் கண்டித்தற்குரியது. நிறுவனம் கோடிக்கணக்கில் சம்பாதிக்க அரசியல்வாதிகள் லட்சக்கணக்கில் சம்பாதிக்க ஆயிரக்கணக்கான மக்கள் வாழ்க்கையைப் பாழாக்குகிறது இந்நிறுவனம்.

நல்ல வழியிலே ஈட்டிய பொருளைக் கொண்டு நன்னெறியிலே அனைவரும் வாழ்வது யாவருக்கும் நன்மை பயக்கும். சுயநலத்தைப் படிப்படியாகக் குறைத்துக் கொண்டு யாவருக்கும் நன்மை தரக்கூடிய செயல்களைச் செய்து வளர்வோமாக!

ஆசியுரை கருத்துரையாக எழுத வேண்டிய கட்டாயம் நேர்ந்ததற்கு வருந்துகிறோம்.

*ஆசிர்வாதங்கள்!*

## தவத்திரு குமார தேவர் அருளிய

# மகாராஜா துறவு (தொடர்ச்சி)

### தாய் தந்தையர்க்கு அரசன் சமாதானம் கூறுதல்

42. அறிவைநோக் கிடில்அதற்குத் தாய்தந்தையிலை
இவ்வுடல் அதனை நோக்கில்
இறையும்நீர் உபாதான காரணம் அன்று
இருமாயை* யினில்உண் டாகும்
குறிஇதுஇங்கு ஆயின்மண்ணில் எனைப்பெறாதவர்
இலைஅக் கொள்கை நீரும்
நிறையும்மதி இலரேநீர் நில்லும்என
இருவரையும் நீத்துப் போனான்.

(* இருமாயை : ஆவரணம், விஷேபம்; ஆவரணம்-மறைத்தல், விஷேபம்-உடல் உலகத் தோற்றம்.)

"ஆத்மாவைப் பார்க்கும் போது அதற்குத் தாய் தந்தையர் எப்போதும் இல்லை. நிலையற்ற இவ்வுடம்பைப் பார்க்கும் போது நீங்கள் சிறிதும் முதற்காரணம் ஆக மாட்டீர். ஆனால் இது இரு சக்திகளையுடைய மாயையிலிருந்து சொப்பனப் பொருள் போலத் தோன்றும். இக்கருத்தினை ஆராய்ந்து பார்க்கும் போது இவ்வுலகில் என்னைப் புதல்வனாகப் பெறாதவர் ஒருவரும் இலர். நீங்களும் அத்தன்மை உடையவரே. ஆதலால் விவேகம் இல்லாதவர்களே! நீங்கள் நில்லுங்கள்" என்று அவ்விருவரையும் விட்டுப் போனான்.

### மகாராசன் மனைவி தடுத்தல்

43. அரிவையர்கள் தமக்குஇலக் கணம்கூறும்
நூல்அதனில் அதனை எல்லாம்
உரிமையதா உடையவளாம் இனியமனை
தொடர்ந்துஏகி உருகி நின்று
பரிவினுடன் அடிகள்பணிந்து அரற்றியே
பதைபதைத்துப் பனிகண் பாயத்
தரியன்உமை விடுத்துஉலகம் அதனில் ஒரு
கணமேனும் சாவேன் என்றாள்.

பெண்களுக்கு உரிய அழகு இலக்கணம் கூறுகின்ற நூல்களில் சொல்லப்படும் அழகை எல்லாம் தனக்கு உரிமை ஆக்கிக் கொண்டவளாகிய அவ்வேந்தனின் இனிய மனைவி, தன் கணவன் துறவியாய்ச் செல்வதை அறிந்து, மிக்க அன்புடன் அவன் எதிரில் நின்று அவன் பாதங்களை வணங்கிக் கதறி அழுது துடி துடித்துக் கண்களில் நீர் ஒழுக, "நான் உம்மைப் பிரிந்து ஒருகணமும் இருக்க மாட்டேன் சாவேன்" என்று சொன்னாள்.

### அரசன் தன் மனைவிக்குச் சமாதானம் கூறுதல்

44. நின்னுடைய நாயகனை நினதுஉள்ளே
உறநோக்கி நிற்க மாட்டாது
உன்னுடைய நாயகன் என்று என்தனையே
கருதிநீ உழல்வது என்னே
மின்அனைய இடையாய்கேள் அனைவருக்கும்
நாயகன்ஓர் மேலாம் ஈசன்
அன்னவனை யேதேடிப் போகின்றேன்
எனஅரசற்கு அரிவை சாற்றும்.

இவ்வாறு கூறக் கேட்ட அரசன் அவளை நோக்கி, "மின்னல் போன்ற இடை உடையவளே, நான் சொல்வதைக் கேள். ஒவ்வொருவருக்குள்ளும் பரமாத்மாவாகிய நாயகன் இருப்பதை நீ அறியவில்லை. அந்தப் பரமாத்மா உனக்குள்ளும் இருப்பது தெரியாமல் என்னையே உனது நாயகன் என்று கருதி நீ கலங்குவதற்குக் காரணம் என்ன? ஒப்பற்ற தலைவனாகிய ஈசனே எல்லோர்க்கும் நாயகன். அத் தலைவனையே நான் தேடிக் கொண்டு செல்கின்றேன்" என்று கூறினான். அதனைக் கேட்ட அவள் அரசனுக்குச் சொல்லத் தொடங்கினாள்.

### பட்டத்தரசி தன் கணவனைப் பிரிய விதியில்லை என்று கூறுதல்

45. ஞானமா னதுபொதுவே நூல்அதனில்
துறவுஅதற்கு நவில்வது இல்லாள்
ஆனமா தினைஅலவோ விடுகஎன
அறையும்பதி ஆன உன்னை

ஈனமா விடுகஎன அறையும்அதோ
துறவறம்இங்கு எனக்குஎன் சொல்லும்
ஆனதால் உனைஒழிந்து கதிஇலையே
எனஎண்ணி யான்அடுத்தேன் என்றாள்.

"நூல்கள் கூறும் ஞானமானது, ஆண் பெண் ஆகிய இருபாலருக்கும் பொதுவானதே. ஆதலால் இருவரும் அதனை ஏற்றுக் கொள்ள வேண்டும். அத்துறவிலே சொல்லப்படும் விதி, துறவுக்கு இடையூறாய் இருக்கும் மனைவியை அல்லவோ ஆடவர் விட வேண்டும் என்று சொல்லும்? என்னுடைய நாயகனாகிய உன்னை விட வேண்டும் என்று அத்துறவற நூல் சொல்லுமோ? ஆகையால் உன்னையன்றி வேறு கதி எனக்குஇல்லை என்று எண்ணி உன்னிடம் வந்து சேர்ந்தேன்." என்று மகாராணி கூறினாள்.

### அரசன் தன் மனைவி கூற்றுக்குச் சமாதானம் கூறிச் செல்லுதல்

46. ஆகமத்தின் விதிதவறாது அறைந்தனைநீ
விவேகியே ஆவாய் யானும்
தேகம்முதல் பிரபஞ்சம் அதனின்நசை
விடுத்துவனம் செல்லா நின்றேன்
நாகமுலை யாய்என்உரை தடுத்தல்உன்தன்
விரதமல நாடு தன்னில்
போகுதிஎன்று அவளைவிடுத்து ஏதிலரைப்
போல்அகன்று போகா நின்றான்.

அரசன் தன் மனைவியை நோக்கி, "ஆகம விதிகளைத் தவறாமல் எடுத்துக் கூறினாய். ஆதலால் நீ புத்திசாலி ஆவாய். நானோ உடல் முதலான உலக ஆசையை விடுத்துத் துறவு பூண்டு காட்டிற்குச் செல்கின்றேன். இளமை பொருந்திய தனங்களை உடையவளே, பத்தினி ஆகிய நீ என்சொல் மறுப்பது தருமம் ஆகாது. எனவே நீ நாடு செல்க" என்று கூறி அவளை விடுத்து அயலவரைப் போல அவ்விடம் விட்டு அகன்று போயினான்.

### அரசி வருந்தி மாமன் வீடு போய்ச் சேருதல்

47. விரிவாய ஞானமதை உணர்ந்தாலும்
மடந்தைபதி விலங்க நிற்றல்
அரிதுஆய தகைமையினால்ஏங்கியே
பதைபதைத்துஅங்கு அவனை நோக்கித்
தரியாது கதறியே வினைதனையே
நொந்துதான் தளர்ந்து நின்று
தெரியாது மறைந்தஇடம் தனில்மிகவும்
உருகியே தேம்பி வீழ்ந்து.

பெண்ணானவள் விரிவான ஞானத்தை அறிந்து இருந்தாலும் கணவனைப் பிரிந்து வாழ்வது அரியதாகும். ஆதலால் அந்த அரசி தன்னை விட்டுப் பிரிந்து செல்லும் நாயகன் செய்கையைக் கண்டு ஏக்கம் அடைந்து துடிதுடித்து, துயரம் தாங்காது கதறி அழுதாள். தன் முன்வினையை எண்ணி நொந்து வெறுத்துச் சோர்வடைந்து ஒருவரும் அறியாத இடத்தில் நின்று மிகவும் மனம் உருகித் தேம்பி விம்மி அழுது வீழ்ந்தாள்.

48. வேந்தனே உனைவிடுத்தும் உலகம்அதில்
இருக்கவோ விதித்தான் ஈசன்
தீர்ந்ததோஉனக் கும்எனக்கும் வினைதானும்
இன்றுஅளவில் சேர்ந்து நிற்கும்
போந்தஉனை எக்காலம் காண்பேன்நான்
இனிஎனவே புலம்பி மாதும்
சார்ந்தனள்பின் திரும்பியே நகர்அதனில்
மாதுலன்தன் சார்பு தன்னில்.

"அரசனே உன்னை விட்டு நீங்கிய பின்னும் நான் இவ்வுலகத்தில் உயிருடன் இருக்கவோ கடவுள் எனக்கு விதித்தான்? நாம் இருவரும் கூடி இல்லறத்தில் வாழ்வதற்குக் காரணமாய் இருந்த பழ வினையும் இந்த நாளில் உனக்கும் எனக்கும் தீர்ந்து விட்டதோ? என்னோடு கூடி வாழ்ந்து பிரியும் உன்னை நான் இனி எக்காலம் காண்பேன்?" என்று புலம்பிய அரசி தன் மாமனுடைய இருப்பிடத்தைச் சேர்ந்தாள்.

## வனம் சென்ற அரசன் நிலைமை

49. அரசன்அந்த நகர்விடுத்துத் தேசநாடு
கஞம்அகன்று அடவி சென்றே
இரவுபகல் அகநிலையே நிலையாக
இருந்தவர்கள் இடமே சேர்ந்து
பரகுருவின் உபதேசத்து அரியபொருள்
வினவிஅவர் பகரக் கேட்டுத்
திரமனமாய் ஒருவரால் கலங்காத
ஞானியாயத் தீரன் ஆகி.

அனைவரையும் விட்டுச் சென்ற மகாராசன், அந்நகரை விடுத்து, நாட்டையும் நாட்டைச் சார்ந்த ஊர்களையும் கடந்து காட்டிற்குள் சென்றான். இரவும் பகலும் தன் ஆத்மாவை நோக்கி நிற்கும் நிலையே தமக்கு உரிய நிலையென்று நிட்டை கூடி இருந்த ஆத்ம ஞானிகளிடம் சேர்ந்தான். தமக்கு முன்னர் உபதேசம் செய்தருளிய உயர்ந்த குருவின் மகா வாக்கிய உபதேசத்தின் அரிய பொருளை அவர்கள்பால் கேட்டான். அதனை அவர்கள் சொல்லத் தெளிவடைந்து கலக்கம் தீர்ந்த ஆத்ம ஞானியானான்.

50. நகர்தனில் ஏகிப் பிச்சை
நண்ணியே மனைகள் தோறும்
அகமகிழ்ந்து அங்கை ஏற்றே
அவ்விடத்து அருந்தி ஆங்கே
செகம்உளோர் பேய்என்று எண்ணிச்
சிரித்திட நாணம் இன்றி
இகபரத்து இச்சை அற்றே
ஏகனாய் உலாவல் உற்றான்.

தனக்குப் பசி வந்த போது ஊருக்குள் சென்று, இல்லங்கள் தோறும் பிச்சை உணவை உள்ளங் கைகளால் வாங்கி, மன மகிழ்வுடன், வாங்கிய அவ்விடத்திலேயே உண்டான். உலகப் பற்றுடைய மனிதர்கள் அனைவரும், இவர் திரியும் கோலம் கண்டு பேய் என்று எண்ணிச் சிரித்திட அதற்காக வெட்கப் படாமல், இவ்வுலக ஆசையையும் மேல் உலக ஆசையையும் விட்டுத், தனியராய் உலாவித் திரிந்தான்.

51. பொருந்திவாழ் இடம்ஒன்று ஆகில்
பொருந்திடும் பற்றுஎன்று எண்ணி
இருந்திலன் ஓர்இ டத்தும்
எங்கெங்கும் ஒருவன் ஆகித்
திருந்திய சமாதி விட்டுத்
திரும்பிடாது உறைக்க உன்னி
இருந்துஇருந்து இடங்கள் எங்கும்
ஏகமே நோக்கி நின்றான்.

மேலும், அவன் ஒரே இடத்தில் வாழ்ந்தால், அவ்விடத்தின் மேல் பற்று ஏற்படும் என்று எண்ணி, ஓர் இடத்திலும் நிலையாக வசித்திடாமல் இருந்தான். தனியே திரிந்தான். நிலையான சமாதியை விட்டு உலகின் பக்கம் மனம் திரும்பாமல், அச்சமாதி நிலையிலேயே அழுந்தி இருந்தான். எல்லா இடங்களிலும் ஒன்றாகிய பரம்பொருளையே கண்டான்.

52. தோன்றிடும் உலகம் எங்கே
தோன்றிடும் என்ன நோக்கித்
தோன்றிடும் நினைவில் என்றே
தோன்றிய நினைவு தானும்
தோன்றிடும் இடத்தைப் பார்த்துத்
தோன்றிடும் சொரூபத்து என்றே
தோன்றிடும் பொருள்கள் எல்லாம்
சொரூபமே என்று கண்டான்.

மகாராசன் முழுமையான சமாதி நிலையில் இருந்த பொழுது, கண்களுக்குத் தோன்றும் இவ்வுலகம் எங்கிருந்து தோன்றுகின்றது என்று ஆராய்ந்து பார்த்து, அது நினைவிலே தோன்றுகின்றது, என்று உணர்ந்தான். பின்னர் அந்த நினைவும் தோன்றுகின்ற இடத்தை ஆராய்ந்து நோக்கி, தன் ஆத்ம வடிவத்திலேயே தோன்றும் என்பதை உணர்ந்தான். பின்னர் உலகம் நினைவில் தோன்றுவதாலும், நினைவு ஆத்ம வடிவில் தோன்றுவதாலும் ஆத்ம வடிவின்றி நினைவு இல்லை, நினைவு இன்றி உலகு இல்லை, ஆதலால் தோன்றுகின்ற பொருள்கள் எல்லாம் ஆத்ம வடிவமே என்று உணர்ந்தான்.

53. தோன்றிடும் பொருள்கள் உண்டாய்த்
தோன்றியே இன்பம் ஆகித்
தோன்றிடும் அதனால் அந்தச்
சொரூபமே என்று கண்டு
தோன்றிடும் சொரூபம் தன்னில்
தோன்றும்ஈது அசத்தே என்று
தோன்றிடும் சொரூபம் தானாய்த்
துளக்கம்அற்று இருந்தான் வேந்தன்.

புலனாகும் பொருள்கள் அனைத்திலும் பெயர், வடிவம், சச்சிதானந்தம் மூன்றும் விளங்குகின்றன. இவற்றில் பெயரையும் வடிவத்தையும் நீக்கிவிட்டால் மீதமிருப்பது சச்சிதானந்தமாகிய ஆத்மாவே. இதை உணர்ந்துவிட்ட மகாராஜன் பெயரும், வடிவும் நிலையற்றவை என்று தெளிந்தான். எல்லாப் பொருள்களும் தானும் ஒரே பரம்பொருளின் சொரூபமே என்று உணர்ந்து சிறிதும் சலனமற்று இருந்தான். தானே பிரம்ம சொரூபம் என்று அறிந்தான்.

54. கடிநகர் தோறும் சென்றும்
கானகம் தோறும் சென்றும்
படிவலம் ஆகி வந்தும்
பார்வைமா றாட்டம் இன்றி
மடிவுஇலா மனத்தன் ஆகி
மாசுஇலா நிலைமை பெற்று
முடியுடை வேந்தர் வேந்தன்
முத்தியே வடிவம் ஆனான்.

அரசர்க்கு அரசனான மகாராஜன் நகரங்களிலும் வனம் வனாந்தரங்களிலும் சுற்றி அலைந்தான். பார்க்குமிடமெங்கும் நீக்கம் அற நிறைந்திருக்கும் பரபிரம்ம சொரூபத்தையே கண்டான். அதனால் சிறிதும் வாட்டமின்றித் தூய்மையான உள்ளத்துடன் பற்றே இல்லாத முக்தி வடிவம் அடைந்தான்.

55. முத்தியே வடிவம் ஆன
முடியுடை வேந்தர் வேந்தன்
எத்திசை தனக்கும் இராசன்
எனைவிட வேறுஇல் என்று

சத்தியம் ஆக எண்ணித்

தன்னிடம் அதனில் தன்னைச்

சுத்திசெய்து அனைத்தும் ஆகிச்

சுயம்சோதி ஆகி நின்றான்.

சீவன் முத்தனான முடிதரித்த வேந்தன் எத்திசையிலும் பரிபூரணமாக நிறைந்திருப்பது பிரம்ம சொரூபமே என்று சத்தியமாகத் தெளிந்ததால் தானும் எத்திசையிலும் நிறைந்திருப்பதை உணர்ந்தான். பிரம்ம சொரூபத்திலிருந்து தன்னைப் பிரித்துக் காட்டும் உபாதிகளிலிருந்து விடுபட்டு மறைப்பு நீங்கி, தானே அறிவு வடிவமாக சீவ பிரம்ம ஐக்கிய பாவனையை அடைந்தான்.

56. தன்னையே அன்றி ஒன்றும்

தான் உதியா இடத்தின்

மின்னையே ஒத்த வையம்

மித்தை கற்பிதம் என்று

பொன்னையே அன்றி வேறு

பூடணம் இலது போல

என்னையே அன்றி ஒன்றும்

இல் எனத் தேர்ந்தான் வேந்தன்.

மகாராசாவானவன் உலக வாழ்க்கை மின்னி மறையும் மின்னலைப் போன்றது. ஆத்மாவிலிருந்து அந்நியமாக வேறு ஒரு பொருளும் தோன்றாது என்பதையும், மனதினால் கற்பித்துக் கொள்ளப்பட்ட உலகம் பொய்யான தோற்றம் என்பதையும் உணர்ந்து கொண்டான். பொன்னால் செய்யப்பட்ட ஆபரணம் எப்படிப் பொன்னிலிருந்து வேறுபடாதோ அதுபோல ஆத்மாவையன்றி வேறு ஒரு பொருள் இல்லை என்பதை அறிந்து கொண்டான்.

57. உலகினை வேறு அது ஆக

உணர்ந்திடில் பந்தம் ஆகும்

உலகினைத் தானே ஆக

உணர்ந்திடில் முத்தி ஆகும்

இலகிடக் கண்டு தோன்றல் எல்லாம்
என் நினைவே என்று எண்ணி
இலகிடக் கண்டு வேறு அற்று
இருந்தனன் இளமை வேந்தன்.

இந்த உலகமானது தன்னிலிருந்து வேறுபட்டது என்று நினைத்தால் அதுவே பந்தம். உலகத்தை வேறாக உணர்வதால் ஆசை உண்டாகிறது. ஆசையே துன்பத்திற்குக் காரணம். இந்த உலகமும் நானும் வேறு வேறு அல்ல என்ற தெளிவு பிறந்து விட்டால் அதுவே முத்திநிலை. கண்களால் பார்க்கும் பிரபஞ்சத்தோற்றம் எல்லாம் தன்னுடைய கற்பனையில் தோன்றுபவையே என்று தன் உள்ளத்தில் சிந்தனை செய்து அசைவற்ற சமாதி நிலையில் இருந்தான் அந்த மகாராசன்.

58. ஏகசக் கரம்அது ஆக
இருந்துஅரசு ஆள்வோன் செல்வப்
போகமும் திரண மாம்அப்
போதநாட்டு அரசு இயற்கை
யூகபுந் தியினால் ஆசான்
உபதேசத்து ஆன அந்தச்
சோகம் அற் றிடுநாடு எய்தித்
தொழில்எலாம் முடித்தான் மன்னன்.

உலகமெல்லாம் ஒரு குடையின் கீழ்க் காக்கின்ற சிறந்த மகாராசன், அவனுடைய செல்வங்களையும், உலக இன்பங்களையும் அரசபோகங்களையும் துரும்பாக எண்ணிப் பற்றற்ற நிலையை அடைந்தான். அறிவு பூர்வமாகக் குருவின் உபதேசங்களைச் சிந்தனைசெய்து மனம் தெளிந்து அனைத்து விவகாரங்களையும், தத்துவ ஆராய்ச்சிகள் செய்வதையும் கூட விட்டு விட்டுச் சோகம் என்பதே தீண்டமுடியாத பேரின்ப நிலையில் ஆழ்ந்து விட்டான்.

*(தொடரும்....)*

## ஞான வாசிட்டக் கதைகளும் தத்துவமும் (தொடர்ச்சி)

(சாது மெய்யப்ப ராமசுவாமி, கோவிலூர் மடாலயம்)

### III/05/08 : வஞ்ச இந்திரன் கதை

**முற்குறிப்பு :** மொத்தம் ஒன்பது பாடல்கள் மட்டுமே கொண்ட இக்கதை, இந்தப் பிரகரணத்தின் மிகச்சிறு பகுதியாகும். இதில் வரும் மூன்று இந்திரப் பெயர்கள் மற்றும் இரண்டு அகல்யைப் பெயர்களுக்கிடையேயான வேறுபாட்டினை நன்கு புரிந்து கொள்ளவேண்டும்.

**கதைப்பகுதி:** இந்திரத்யும்னன் எனும் பெயருடைய ஓர் அரசன் இருந்தான். மகத நாட்டை ஆண்ட அவன், மிகவும் நல்லாட்சி செய்தவனாவான். அவனது அரசியின் பெயர் அகல்யை என்பதாகும். இவள், இவளது ஒரு முற்பிறப்பில், தேவ அரசனான இந்திரனைக் கூடி இருந்தவளாவாள்.

அரசனும் அரசியும் வாழ்ந்த அதே நகரத்தில் ஒரு கெட்ட மனிதனும் வாழ்ந்தான். அவன் பெயர் இந்திரன். (....வேறுபாட்டிற்காக அவனை வஞ்ச இந்திரன் என்போம்....) வஞ்ச இந்திரன், பல பெண்களால் விரும்பத்தக்க குணமும் உடையவன்.

ஒருமுறை, அரசி அகல்யை, ஓர் கதை கேட்க நேர்ந்தது. அதில், கௌதம முனிவரின் மனைவியான அகல்யை, தேவேந்திரனோடு கூடியமை பற்றிக் கூறப்பட்டது. அரசி அகல்யை, தானும் அவ்வாறே செய்ய விரும்பினாள். முடிவில், அரசியும் வஞ்ச இந்திரனும் கூடிக் களித்தனர்.

தனது அரசியே இழிசெயல் செய்தமை, அரசருக்குத் தெரியவந்தது. அவர் மிகுந்த சினம் கொண்டார். தன் மனைவியே ஆயினும் இழிசெயலுக்கான தண்டனையை வழங்குதல்(துஷ்ட நிக்ரஹம்) அவரது கடமையாகவும் இருந்தது. ஆதலால், விசாரணை தொடங்க விரும்பினார்.

குற்றம் புரிந்த இருவரும் அரசவைக்கு வந்தனர். அரசரும்

அவ்விருவருக்குமான தண்டனைகளை அறிவித்தார்.

மிகுந்த துன்பம் தரும் பலவிதமான தண்டனைகளுக்கு அரசியும் வஞ்ச இந்திரனும் ஆட்பட்டனர். ஆனால் அவ்விருவரும் சிறிதும் வருந்தாது, ஒருவரை மற்றொருவர் பார்த்துச் சிரித்து மகிழ்வுற்றவாறு இருந்தனர். இதனைக் கண்ணுற்ற அரசர் மிகவும் வியப்புற்றார். "நீவிர் துயருறாமை எதனால்?" என வினவினார்.

அவர்களிருவரும்,

**"வரைசெய்புயத்தாய் எங்கண் முகமதியின் அமுதம் விழிஅருந்தக்**
**கரைசெரியக் களிப்பான்மெய் காணேம்வருத்தம் காண்பேமோ"**

என மறுமொழி கூறினர். மேலும், உடலுறுப்புக்களுக்கும் மனத்திற்குமான தொடர்பு பற்றிய விளக்கமும் கூறினர். (இது தத்துவப்பகுதி)

இதனைக் கேட்ட அரசர், அருகில் அமர்ந்திருந்த பரத முனிவரிடம், "இவர்கள் செய்தது வஞ்சகச் செயலே, எனினும் இவர்தம் மனநிலை பரமார்த்திகமானது," என்றார்.

வஞ்சஇந்திரன் மற்றும் அகல்யை அரசியின் உயிரைக் கவர வேண்டிய மன்னவர், அவர்களது விளக்கத்தால் மகிழ்வுற்று, (தண்டனையைக் குறைத்து) அவர்கள் நாடு விட்டுப்போய் விடட்டுமெனப் பணித்தார்.

**"சிந்தைமயலுற்று இருந்தும் இவர் சிற்பாவனை செப்பினரென்னா**
**புந்திமகிழ்ந்து புறநாட்டிற் போம்என்றவரைப் போக்கினனால்"**

என இக்கதை முடிவுறுகிறது.

**தத்துவப்பகுதி :** வஞ்சனை செய்தது தன் அரசியே ஆயினும் குற்றம் குற்றமே என வெகுண்டுபோன மன்னவனும் கூட, அவளது மனநிலை பரமார்த்திகமானது என அறிந்ததும் அவளையும், அதே மனநிலையுடைய வஞ்சகனையும், உயிர் வாங்காது விட்டான் என்பதை இக்கதை வலியுறுத்துகிறது.

தன்னிலை விளக்கமாக அவர்களிருவரும் அரசருக்குக்

கூறியதாவது:

**"அரிந்தபொழுதும் உடல்துன்பம் அறியேம்ஒன் றில்அன்பாகிப்
புரிந்துபற்றும் மனத்தினுடல் பொன்றவரினும் துயர்தோன்றா
தெரிந்தபொருளில் மனமழுந்தில் தேகத்தொழில் வேறெவர்காண்பார்
விரிந்தமுனிவர் சாபமும்பல் வினையும் அதனை மீட்பரிதாம்"**

மேலும்,

**"மாண்டுவாளா போனஉடல் மட்டொன்றில்லை அவைஎல்லாம்
தாண்டுமனத்தால் உண்டாகும் சலத்தாலன்றிக் காடுண்டோ
தூண்டுமனமே முதல்வடிவாய்த் தூலஉடலம் போனாலும்
வேண்டும்உடல்கள் விரைந்துஎடுக்கும் விரியும்கனவில்
செயல்போல"**

(அரிந்த = வெட்டிய, பொன்றல் = குறைதல், மாண்டு வாளா = இறந்து வீணாகி, மட்டில்லை = கணக்கில்லை)

நம் உடல் சடமாகும். அதற்கு வலியோ துன்பமோ தானாகத் தெரியாது. நம் உடல் மனத்தின் கட்டுப்பாட்டில் உள்ளது. (மனம் காரணம், உடல் காரியம்) எனப்படுகிறது. காரணம் எதில் பற்றுடையதாகிறதோ அதிலேயே இலயிப்புறும். மனமானது உடலில் பற்று வைக்காவிடில், நமக்கு வலிதெரியாது. இவ்வாறு மனமே நமது உண்மையான உடல். மனம் என்பது மிகுதியான ஆற்றலுடையது. திடபாவனையுடைய மனம் உடலோடு பொருந்தி, நன்மையையோ தீமையையோ செய்ய வல்லது. மனதைப் பரமார்த்திகமானதாக மாற்றுதலும் இயலும். இதற்கு அகங்காரமும் அபிமானமும் நீங்க வேண்டும். அது எவ்வாறெனில், மனத்தை அதன் நிலைக்களனில் (காரணம்/அதிட்டானம்/தொடக்கம்) ஒடுக்க வேண்டும். இது பரமார்த்திக நிலை எனப்படுகிறது. அரசியும், வஞ்ச இந்திரனும் இந்நிலையில் இருந்ததாகத் தெரிகிறது. அதனாலேயே ஞானிக்கு வலியும் துன்பமும் இல்லை எனவும் கூறப்படுகிறது.

(பிற்குறிப்பு : இதற்கு முந்தைய கதையில் (III/04/07), உலகமும் உலகியலும் மனதின் விரிவே எனப்பட்டது. இக்கதையில் நம் உடலும்,

உடலுறுப்புக்களும் மனதின் அடிமை எனப்பார்த்தோம். அடுத்து வரும் கதையும் மனம் பற்றியதே. அக்கதையில், "வஞ்ச இந்திரன் கதை, விளையாட்டுப் போலக் கூறப்பட்டது" என வசிட்டர் விளக்குகிறார். ஆதலால், ஓர் அரசி, கெட்டவனோடு கூடினாள் என்பதை மேற்கோளாக்காது, "எத்தகைய மோசமான நிலையிலும் கூட, அதில் சிறிது பரமார்த்திகம் உண்டெனில், அது மிக உயர்வாக மதிக்கப்படும்" எனும் கருத்தைக் கொள்ள வேண்டும்).

*(தொடரும்....)*

## ஆண்டவரின் சீடர்களுடைய அற்புதக் குணங்கள்

**(சீர் வளர் சீர் மெய்யப்ப ஞான தேசிக சுவாமிகள்)**

1814 ஆம் ஆண்டே திருநெல்லை அம்பாளுடைய சந்நிதித் திருப்பணிகள், மெய்யப்பச் செட்டியார் வள்ளியம்மை ஆச்சி அவர்களுடைய மகனாகப் பிறந்த முத்தராமலிங்கத்தால் தொடங்கப் பெற்றது. அவர்கள் இந்தக் கிராமத்திலேயே தங்கித் திருப்பணிகள் செய்தமையால், அவருடைய அத்வைத ஞானத் தெளிவை அறிந்தவர்கள் அவருடைய சீடர்களாக மாறிப் பாடம் கேட்கத் தொடங்கிக் காலப்போக்கில் கோவிலூரிலேயே தங்கி அத்வைதப் பாடங்கள் கேட்கத் தொடங்கினார்கள்.

அவரிடம் வேதாந்தப் பாடங்களைக் கேட்டுத் தெளிந்த மகான்கள் 36 பெயர்களைக் கோவிலூர் திருக்குட நீராட்டு மலரில் ( 1978 ) தமிழறிஞர் சோமலே குறிப்பிடுகிறார்கள். அவர்களிலே கீழ்க்கண்ட மகான்களுடைய தொண்டும், குணங்களும் மிகவும் பாராட்டுக்குரியனவாகும். கீதாச்சாரத்தின் சிகரமாகவும் திகழ்கின்றன.

1. துறவு ஆண்டவர் என்னும் அருணாச்சல ஞான தேசிகர் 2. கருணாநிதி என்னும் சிதம்பர ஞான தேசிகர் 3. சின்னத்துறவு என்னும் கண்டனூர் அருணாச்சல சுவாமிகள் 4. மதுரை குட்டைய சுவாமிகள் 5. காரைக்குடி அண்ணாமலை ஐயா (சுவீகாரத்தந்தை) 6. நேமத்தான்பட்டி பழனியப்ப ஐயா 7. பள்ளத்தூர் முத்துவீரப்ப ஐயா 8. காரைக்குடி நல்லாஞ் செட்டியார்

கடைசியாகக் குறிப்பிட்ட காரைக்குடி நல்லாஞ்செட்டியார் ஆண்டவருடைய பாலிய காலம் தொட்டே தோழராக இருந்து வந்துள்ளார். ஞானாச்சாரியார் உகந்தலிக்க சுவாமிகளின் பத்தினியார் வேண்டுதலுக்கு இணங்க மயிற்குஞ்சுகள் தேடக் கோவிலூர் வந்த காலந்தொட்டுத் திருப்பணிகள் நடக்கின்ற காலத்தும் உடனிருந்து பணி செய்தவர்கள்.

துறவாண்டவரும், கருணாநிதி சுவாமிகளும் கோவிலூர் ஆதினத்தினுடைய மடாதிபதிகளாக அடுத்தடுத்து ஆட்சி செய்தவர்கள். ஒரு குறிப்பிட்ட நன்னாளில் தன்னுடைய அனைத்துச் சீடர்களையும் அழைத்துத் தான் குறிப்பிட்ட தேதியில் சமாதியாகப் போவதாக அறிவித்து, "அருணாச்சலம் நமக்குப்பின்னர் மடத்தைப் பார்த்துக் கொள், சீடர்களுக்குப் பாடத்தைச் சொல்" என்று அருள் பாவித்து, பின்னர் "சிதம்பரம் - நீ கோவில் திருப்பணிகளையும், மட நிர்வாகத்தையும் பார்த்துக் கொள்" என்று திருவாய் மலர்ந்து அருளினார்.

அவர்கள் அறிவுறுத்தியபடியே ஜீவ சமாதி அடைந்த பின்னர் அருணாச்சல சுவாமி என்ற துறவு ஆண்டவர் ஏறக்குறைய 2 ஆண்டுகளே அருளாட்சி புரிந்தார்கள். அந்தக் குறுகிய காலத்திலும் பல சீடர்களுக்குப் பாடம் சொல்லிக் கரையேற்றினார்கள். அத்துடன் கைவல்லிய நவநீதத்திற்கு முதன் முதலாக ஓர் அரிய செம்மையான உரையை எழுதி அளித்தார்கள். அடுத்ததாக, கருணாநிதி சுவாமிகள் ஏறக்குறைய 27 ஆண்டுகள் அருளாட்சி செய்தார்கள். இவர்களும் நிறைந்த எண்ணிக்கையில் சிறந்த மாணாக்கர்களை உருவாக்கினார்கள். இவர்கள் கோவிலூர் மரபு வேதாந்தப் பாடத் திட்டத்திலே சேர்க்கப்பட்டுள்ள லட்சணாவிருத்தி என்னும் நூலை எழுதி அருளினார்கள். இவர்கள் இருவரைப் பற்றியும், இவர்களுடைய ஞானத் தெளிவைப் பற்றியும், சீடர்களைப் பற்றியும் பின்னர் இன்னும் விரிவாகப் பார்ப்போம்.

அடுத்ததாக மதுரை குட்டைய சுவாமிகள். தேவகோட்டையைச் சேர்ந்த இவர்கள் 19ஆம் நூற்றாண்டின் தொடக்க காலத்திலேயே ஆண்டவரின் ஆணைக்கிணங்க மதுரைக்குச் சென்று மீனாட்சி அம்மன் கோவிலிலே அமராவதிபுதூர் வைணாகரம் குடும்பத்தார் செய்த திருப்பணிக்குத் துணையாகவும், ஆலோசகராகவும், சிறப்பாகப் பணி

செய்தார்கள். மதுரை சாமி சன்னிதிக்கு எதிரே உள்ள கம்பத்தடி மண்டபமும், வடக்குக் கோபுர வாசலும் குட்டைய சாமியின் மேற்பார்வையிலே வைணாகரம் வெங்கடாசல ஐயா, இராமநாத ஐயா அவர்களுடைய பொருளுதவியாலும் நிறைவேற்றப்பட்டது. அந்தக் காலத்திலேயே 25 லட்ச ரூபாய் செலவழித்து இந்த இரண்டு திருப்பணிகளும் செய்யப்பெற்றதாக வைணாகரம் பாலகவி வெ. இராமநாத ஐயா குறிப்பிடுகிறார்கள்.

கம்பத்தடி மண்டபத்திலே சிவபெருமானுடைய 25 திருமூர்த்தங்களும் செதுக்கப்பட்டுள்ளன. இவர்களுடைய தொண்டை இந்தத் திருப்பணியின் நேர்த்தியினைக் கண்டு அளவிடலாம். குட்டைய ஐயா, மதுரையிலே தங்கியதாலே உள்ளூர் வாசிகளும், நகரத்தார்களும் அளித்த கொடையாலே குட்டைய சாமி மடம், தெற்கு வெளி வீதி, மதுரை தோற்றுவிக்கப்பட்டு 1872இல் அருளாட்சி செய்து மதுரை நகர மக்களுக்கு உபதேசம் செய்து வந்தார்கள்.

அடுத்ததாக, காரைக்குடி அண்ணாமலை ஐயா, நேமத்தான்பட்டி பழனியப்ப ஐயா, பள்ளத்தூர் முத்துவீரப்ப ஐயா ஆகியோர்களைப் பற்றிப் பார்ப்போம்.

(தொடரும்....)

## சித்த ஞானம்

(காப்பியக் கவிஞர் நற்றமிழ் நாவலர். நா.மீனவன்)

“அன்பே கடவுள்” என்றனர் ஆன்றோர். “அன்பு காட்டுவது ஓர் உயர்ந்த அறம்” என்று பழந்தமிழ் நூல்கள் பறை சாற்றுகின்றன. விலங்குகளில் கூட, அதாவது நாய், மாடு ஆகியவற்றை நாம் வளர்ப்பதில் ஆர்வம் காட்டி அன்பு செலுத்தி வருவது கண்கூடு. நாம் அன்பாகப் பழகும் போது அவைகளும் நம்மிடம் அன்பாகப் பழகுகின்றன.

“உயிர்களிடத்து அன்பு வேணும்” என்பது பாரதி வாக்கு. இயற்கையைக் கண்டு அதனிடத்தில் காதல் கொண்டது மனித சமுதாயம். அதனால்தான் “நோக்க நோக்கக் களியாட்டம்” என்று பாடினான் பாட்டுக்கொரு புலவன் பாரதி.

"ஆருயிகட்கு எல்லாம் நான் அன்பு செயல் வேண்டும்" என்பது வள்ளலார் வாக்கு

"அன்புடைமை" என்று அன்பை வலியுறுத்த ஓர் அதிகாரமே பாடினார் செந்நாப் போதார்.

"அன்பே சிவம் என்பது ஆரும் அறிகிலார்
அன்பே சிவமாவது ஆரும் அறிந்தபின்"

அவர்கள் "அன்பே சிவம் ஆகி" அமர்ந்திருப்பார் என்று திருமந்திரம் கூறுகின்றது.

அந்த வகையில் அனைத்து உயிர்களிடத்தும் அன்பு காட்டியதோடு சமுதாயச் சந்தடிகள் ஏதும் இல்லாத காட்டு வாழ்க்கையை மேற்கொண்ட துறவியர் ஐம்புலன்களை அடக்கிச் சித்தத்தைச் சிவன்பால் செலுத்தினர். நாட்டுக்குள் வாராவிடினும் அத்தனை நிகழ்வுகளையும் தம் ஞானக் கண்ணால் உணர்ந்தவர்கள் சித்தர்கள்.

"சித்தன் போக்கு சிவன் போக்கு" என்று ஒரு முதுமொழி உலகில் வழங்கி வருகின்றது.

சித்தருடைய மனம், வாக்கு, காயம் முதலியன சிவன் வசமே சென்று விடுவதால் அவர்கள் செல்கின்ற போக்கு சிவனுடைய போக்காகவே உள்ளது.

சித்தர்கள் உலகினர்க்கு எவ்வாறு நன்மை செய்தனர் என்பதை உலகறியும். இறைவன் ஆகிய அறிவினைக் கொண்டு, அறிவு பெற்று அஞ் ஞானத்தினால் அஞ்ஞானத்தினை அகற்றி, இறைநெறியில் ஒருவனைச் செலுத்தும் இயல்பு சித்தருக்குத்தான் உண்டு.

காய், கனி, கிழங்கு முதலியவற்றை உண்டு காற்றைக் குடித்துக் கானக வாழ்க்கை மேற்கொண்ட அவர்களால் அனைத்தையும் செய்ய முடிந்தது. ஏனெனில் அவர்களை இயக்குபவன் இறைவன் அல்லவா?

மனத்தை ஒரு நிலைப்படுத்தி இறைவனைத் தம் யோக சக்தியால் சுழிமுனையில் சோதியாய் நிறுத்திச் சாவா வரம் பெற்ற சக்தி மிக்கவர் சித்தர்கள். சுருங்கச் சொன்னால் சித்தர்களுக்கு எதுவும்

தேவை இல்லை. "ஆசை அறுமின்கள் ஆசை அறுமின்கள் ஈசனோடாயினும் ஆசை அறுமின்கள்" என்ற நிலையில் உலகப்பற்றை ஒழித்தவர்கள்.

"வேண்டத்தக்கது அறிவோய் நீ. வேண்ட முழுதும் தருவோய் நீ" என்பது திருவாசகத்தின் வாக்கு. வேண்டியதை இறைவன் மூலமே பெற வேண்டும் என்ற தன்மையை இப்படி இறைவன் சித்தர்கள் வழி உணர்த்துகிறார். இவற்றை நாம் சரியாகப் புரிந்து கொண்டால் உலகிலே நாம் வாழ வழி பிறக்கும்.

சித்தர்கள் ஆன்மீகத்தில் மட்டுமன்று, மருத்துவம், வான சாத்திரம் போன்ற பலவற்றில் தம் வல்லமையைக் காட்டியவர்கள். ஏன்? ஒரு வகையில் ஞானிகளாகிய சித்தர்கள் விஞ்ஞானிகளே என்பதை மெய்ப்பித்திருக்கிறார்கள். சித்தர்கள் இன்று நேற்றல்ல பழங்காலம் முதலே இருந்திருக்கின்றார்கள். "எனக்கு முன்னே சித்தர் பலரிருந்தாரப்பா" என்று பாரதி பாடுவதை நினைவு கூர்க.

பொறியடக்கிப் புலன் வென்ற சித்தர்கள் சொன்ன நலம் தரும் வழிகளை நாமினிக் காண்போம். சமயப் பூசலில் மாட்டிக் கொள்ளாதவர்கள் சித்தர்கள். சிந்திக்கும் திறன் கொண்டவர்கள் சித்தர்கள். ஏனெனில் "அன்பே கடவுள்" என்ற உண்மையை ஆன்மாவில் நிறுத்தியவர்கள். அதனால் அவர்களால் அனைத்தையும் செய்ய முடிந்தது. வான்வழிப் பறத்தல், நீரிலே மிதத்தல், நெருப்பிலே இருத்தல், கரடி வெம்புலி வாயையும் கட்டுதல், உடலை இலேசாக்குதல், கனமாக்குதல் போன்ற எண்வகைச் சித்திகளில் வல்லவர்களாய் இருந்தனர். இவைகளெலாம் மனதடக்கி வாழ்ந்த அவர்களுக்கு ஆண்டவன் அளித்த கலை. அவர்கள் மூலம் தான் நினைத்தவற்றை எல்லாம் நடத்திக் கொண்டான் ஆண்டவன்.

சித்தர்கள் உண்மையிலே சீர்திருத்த வாதிகள். ஆரவார வழிபாடுகளை அறவே வெறுத்தவர்கள். "நட்ட கல்லும் பேசுமோ! நாதன் உள் இருக்கையில், சுட்ட சட்டி சட்டுவம் கறிச்சுவை அறியுமோ" என்று பேசக்கூடிய சித்தர் என்ன சொன்னார்? என் உள்ளத்திலே உள்ள கடவுளை வெளியிலே தேடிக் கொண்டிருக்கின்றாயே! என்று வியப்போடு கேட்கிறார்.

விறகிலே தீ ஒளிந்து இருக்கின்றது, பாலிலே நெய் மறைந்துள்ளது. இதனை நாம் வெளிப்படுத்த என்ன செய்ய வேண்டும்? என்ற வினாவிற்கு நாவுக்கரசரே விடையை விளக்குகிறார். அக்காலத்தில் ஒரு கட்டையின் மேல் இன்னொரு கட்டையை வைத்துக் கடைந்தால் நெருப்பு உண்டாகும். பாலைக் காய்ச்சி மத்தால் கடைந்தால் தயிர் தோன்றுகின்றது. அதை உருக்கினால் வெண்ணெய் தோன்றுகிறது. அதுபோல் நீ உறவு என்ற மத்தை நாட்டி உணர்வு என்ற கயிற்றினால் கடைந்தால் ஆண்டவன் வெளிப்படுவான் என்கின்றார். இத்தகைய ஆற்றல் கொண்டவர் சித்தர்களே.

மனத்தை அடக்க இயலுமா? அதனை அடக்க என்ன வழி? என்ற வழிமுறையை அறிந்தவர்கள் சித்தர்கள். மனத்தை ஒரு முகப்படுத்தியதால் அவர்கள் உலகப் பற்றினைப் போக்கி இயற்கை வடிவாய் விளங்கும் இறைவனுடன் ஒன்றிக் கலந்து அதன்வழி அடைந்த ஞானத்தால் மக்களை நெறிப்படுத்தியவர்கள்

ஆட்டம் பாட்டத்தோடு கூடிய அமைதியற்ற நிலையில் ஆண்டவனைக் கொண்டாடும் வெற்று ஆரவாரத்தால் கடவுள் தோன்ற மாட்டான். புலன் அழுக்கற்ற அன்பர்கட்கே அவன் வெளிப்படுவான். இன்றையத் திருவிழாக்கள் இறைவன் திருக்கோயிலில் ஒரு ஆரவாரமான சூழ்நிலையை உருவாக்குவதை நம்மால் காண முடிகின்றது. இயேசு கிறித்து, நாகூர் ஆண்டவர், முதலியோருக்கான தேர்ப்பவனிகள் நடைபெற மூலகாரணமாய் இருப்பவர்கள் யார்? நாம் தானே. இல்லை என்பவன் கூட மறைமுகமாக வணங்குகிறான்.

தமிழ்நாட்டில் நானும் ஒரு சித்தன் என்று சொல்லிக் கொண்டவன் பாரதி. சித்தர்கள் யார் யாரைத் தெய்வம் என்றனர். அவற்றையே இவனும் தெய்வம் என்று சொல்கிறான்.

“எனக்குமுன்னே சித்தர்பலர் இருந்தா ரப்பா
யானும்வந்தேன் ஒருசித்தன் இந்த நாட்டில்
மனத்தினிலே நின்றிதனை எழுது கின்றாள்
மனோன்மணி என்மாதேவி வையத் தேவி

தினத்தினிலே புதிதாகப் பூத்து நிற்கும்
செய்யமணித் தாமரைநேர் முகத்தாள் காதல்
வனத்தினிலே தன்னையொரு மலரைப் போலும்
வண்டினைப்போல் எனையுமுரு மாற்றி விட்டாள்"

பராசக்தி தன்னையும் ஒரு சித்தனாக உருமாற்றியதாகச் சொல்கிறான். பாரதி ஆகிய சித்தன், சமுதாயம்; அதாவது மானிட சமுதாயம் வாழ வேண்டுமென்ற ஆவலுடையவனாக இருந்தான். முற்காலத்தில் நமது நாட்டில் தோன்றிய சித்தர்களும் சமுதாய நலனை விரும்பிப் பணியாற்றியவர்களே.

சித்தர்கள்தாம் பிணி நீக்கும் மருத்துவ முன்னோடிகள். அவர்கள் இல்லை என்றால் மருத்துவத்துறை இவ்வளவு விரிவடைந்திருக்காது. மெய்ஞ்ஞானத்தைத் தேடிய சித்தர்கள் ஒரு வகையில் விஞ்ஞானிகளும் கூட. அவர்கள் தம்மைச் சுற்றி உள்ள மரம், செடி கொடிகள் ஆகியவற்றைத் தமக்கு இறைவன் வழங்கிய ஆற்றலால் கண்டறிந்து எந்த நோய்க்கு எதனை மருந்தாகக் கொடுக்கலாம் என்பதை அறிந்து ஊதியம் இன்றி மருத்துவம் பார்த்தனர்.

"சாவா உடம்பெய்தும்"வழி சொன்ன சித்தர்கள் உலகம் போற்றும் திருவள்ளுவர் சொல்படி

"நோய்நாடி நோய்முதல் நாடி அதுதணிக்கும்
வாய்நாடி வாய்ப்பச் செயல்"

என்றபடி நோயின் மூலத்தை அறிந்து மருந்து தந்தவர்கள். நம்மைச் சுற்றிலும் கிடக்கின்ற செடி கொடிகள் அத்தனையும் மூலிகைகளே. ஆனால் நம்மால் கண்டறிய முடியவில்லை. எல்லாம் அறிந்த சித்தர்களும் அவை முழுவதையும் வெளியிடவில்லை. ஏனெனில் அவர்களுக்குப் பின் வந்தோர் அவற்றை மக்களிடம் காசாக்கத் தலைப்பட்டனர். மேலும் மூலிகைப் பெயர்கள் நேரடியாகச் சூட்டப்படாமல் வேறு சொற்களால் வழங்கப் பெற்றன.

"முசு முசுக்கை" என்ற சொல் "இரு குரங்கின் கை எனப்பட்டது". குரங்கை "முசு"என்ற சொல்லால் குறிப்பிடுவர். அதுபோல மாங்கொட்டையைக் குறிக்க, "கொட்டை முற்றிய கொக்கின் நற்கனி"

என்ற சொல் பயன்படுத்தப் பெற்றது. "கொக்கு" என்பது மாமரத்தைக் குறிக்கும் சொல். மூலிகைகள் பலவற்றை அறிய இயலாமைக்கு இதுவும் ஒரு காரணம்.

இத்தகைய சித்தர்கள் பதினெண்மர் என்று சொல்கின்றனர். ஆனால் அதற்கு மேலும் சித்தர்கள் இருந்ததாகக் குறிப்பிடுகின்றனர். பதினெண் சித்தர்கள் யாவர்? என்பதையும் அவர்கள் சமாதி அடைந்ததாகச் சொல்லப்பெறும் இடங்களும் கீழே தரப்பெற்றுள்ளன.

| | சித்தர்களின் பெயர்கள் | சமாதி அடைந்த இடம் |
|---|---|---|
| 1. | அகத்தியர் | அனந்தசயனம் |
| 2. | நந்திதேவர் | காசி |
| 3. | திருமூலர் | சிதம்பரம் |
| 4. | போகர் | பழனி |
| 5. | கொங்கணவர் | திருப்பதி |
| 6. | மச்சமுனி | திருப்பரங்குன்றம் |
| 7. | கோரக்கர் | பொய்யூர் |
| 8. | சட்டைமுனி | திருவரங்கம் |
| 9. | சுந்தரானந்தர் | மதுரை |
| 10. | இராம தேவர் | அழகர்கோயில் |
| 11. | குதம்பைச் சித்தர் | மயிலாடுதுறை |
| 12. | கருவூரார் | கரூர் |
| 13. | இடைக்காடர் | திருவண்ணாமலை |
| 14. | கமலமுனி | ஆரூர் |
| 15. | வான்மீகி | எட்டகுடி |
| 16. | பதஞ்சலி | இராமேஸ்வரம் |
| 17. | தன்வந்தரி | வைத்தீஸ்வரன் கோயில் |
| 18. | பாம்பாட்டிச்சித்தர் | ஹரி சங்கரன் கோயில் |

*(தொடரும்...:.)*

## கோயிலூர்ப் புராணம் (தொடர்ச்சி)

### மாயப்புலி நீங்கிய படலம்

விரைமலர் செறிதார் துயல்வரு தடந்தோள்
மீனவன் துயிலும்அப் பொழுது
தரைபுகழ் வன்னி வனத்(து) அமர் பெருமான்
சம்புசங் கரன்மகா தேவன்
புரைதவிர் அகண்ட சச்சிதா நந்த
பூரணன் திரிபுவ நேசன்
கரைஇல்மற்(று) அவன்அன் பினைவெளிப் படுத்தல்
கருதிவாள் கவர்ந்தனன் மாதோ 1

கண்டபல் இடத்தும் கலந்(து)இனி(து) அமர்ந்தும்
கண்டிடப் படாப்பெருங் கள்வன்
விண்(டு) அலர் நறும்தார் மணிமுடிச் செழியன்
விழித்(து)உற இருந்திடு போழ்து
மண்(டு)அமர் கடக்க வல்லவாள் கவர
வல்லவன் அவன்துயில் பொழு(து)அப்
புண்தரு வடிவாள் கவர்ந்த(து)ஓர் வியப்போ
புகன்றது நிற்கமற்(று) அப்பால் 2

அளவரும் தனது மாயையால் பேழ்வாய்
அழல்விழிக் கூர்உகிர் நோன்தாள்
பிள(வு)அரும் திறற்புல் ஒன்றுதோற்று வித்துப்
பெரி(து)இளைப்(பு) உற்றயாக் கையனாய்க்
களவறு மனத்தோர் மறையவன் தனையும்
காண்தகத் தோற்றுவித்(து) உழுவை
கொளவரு மறையோன் இடர்ப்படு திறனும்
குறிக்கொளத் தோற்றுவித் தனனே 3

தலைவிரி அரம்பை கூன்குலை அடுக்கில்
ததைசிறு காய்நிகர் விரலும்
அலைஉவர் நிலத்தில் முளைத்(து)எழு ஞாழல்
அலர்பொரு கூரிய உகிரும் .

மலைவுஅறக் கொண்ட வரிஉடற்(று) அரக்கின்
வசப்படு சாதுமா மறையோன்
நிலைகுலைந்(து) ஒடுங்கி ஓலம் இட்(டு)அலறி
நிலம்எலாம் கேட்கஃ(து) உரைப்பான் 4

வளிவழங்(கு) உலகின் ஐவகைப் பயமும்
மாற்றிஎவ் உயிர்களும் புரக்கும்
அளிகெழு மனத்து வள்ளலே அபயம்
அருமறைப் பாலன்மேல் எழுந்த
முளிதருச் செறிதீத் தழல்விழிப் பேழ்வாய்
முதுசினக் கரும்பகட்(டு) ஊர்தி
களிஅறத் தாக்கும் கழல்கழ லாத
கருத்துடைப் புரவல அபயம் 5

மாற்றலர் மடவார் மங்கலம் கழிக்க
வாள்உறை கழிப்பவ அபயம்
கால்தரு தீங்கு புரிந்தவன் போலக்
கைம்மலர் குறைத்தவ அபயம்
போற்றரு மகவான் மணிமுடி சிதறப்
பொலிவளை எறிந்தவ அபயம்
சாற்றரும் வலிசால் மேருவும் நடுங்கித்
தளர்தரப் புடைத்தவ அபயம் 6

அருமறை யவன்யான் வேதம்முற்(று)உ ணர்ந்தேன்
அங்கமும் பயின்றுளேன் உரைத்த
பொருவில்பன் மகமும் புரிந்துளேன் பரமன்
பொற்பதத் துணைமறந்(து) அறியேன்
கருதும்இவ் வனத்து வழிவரு வேனைக்
கதழ்ந்(து) ஒரு வெம்புலி பற்றி
வெருவர அலைக்கும் என்செய்கோ புரப்பாய்
வீரபாண் டியநினக்(கு) அபயம் 7

என்றுகூக் குரல்இட்டு அழுதுஅழுது இரங்கி,
இரங்கி வேதியன் முறையிடுதல்
அன்றுகண் துயில்கூர் வழுதிஅம் செவியின்
அழல்அவிர் சலாகையில் துளைக்கக்
கன்று நெஞ்சினனாய்ப் பதைபதைத்து எழுந்து
கரசர ணங்கள்கம் பித்து
நின்றுநன்று உணர்ந்து மருங்குவைத்து இருந்த
நெடியவாள் நோக்கினன் காணான் 8

நாந்தகம் ஒளித்தார் யார்எனக் கவன்று
நானிலம் துருவியும் காணான்
சாந்தமா மறையோன் உழுவைகோட் பட்டுத்
தவித்துஅழை மாற்றமும் சகியான்
ஏந்துவாள் நேடிப் பாணித்தன் நீதிக்கு
ஏற்றதுஅன்று என்று உளம் துணிந்து
காந்துவெம் புலிமுன் விரைதரச் சென்றான்
களைகணாய் உயிரெலாம் புரப்போன் 9

சென்றமன் னவர்மன் னவன்முகம் நோக்கிச்
சினம்கொடு தீவிழிப் பேழ்வாய்
வென்றவன் புலிஈ(து)உ ரைத்திடும் அரசே
வெம்பசி உடையன்யான் அதனுக்(கு)
ஒன்றஇம் மறையோன் வந்(து)அகப் பட்டான்
ஒருவனே போதும்நீ அணுகில்
கொன்(று)அலா(து) ஒழியேன் என்றது கேட்டுக்
குவலயம் புரப்பவன் உரைப்பான் 10

கூர்உகிர்த் தீவாய்க் கொடும்புலிப் போத்தே
கூறும்என் வார்த்தைகேள் தவத்தில்
சாரும்இம் மறையோன் இனியவன் ஆதி
தணத்தலில் தசைப்பசை இல்லான்
ஒரும்வெள் எலும்பே கணித்திட வெளிதோற்(று)
உடம்பினன் இவனைநீ புசிக்கில்
பார்உறு நினது குலம்நகைத் திடநின்
பற்(று)அகர்ந் திடுவது தேற்றம் 11

இழிவுவந்(து) உற்றும் வெம்பசி தணியா(து)
இதன்இதும் இனியவன் ஆதி
கழியஉண்(டு) உண்டு தசைபொதி விருத்தி
கண்டுமலன் பாரமாய் இருப்பேன்
அழிவுசெய்(து) எனைநீ நுகர்ந்திடில் பசியும்
அடங்கிடும் மறையவன் வாழ்நாட்கு
ஒழிவுறா மையின்நல் அறமுமுண்(டு) ஆம்என்(று)
உரைத்திடக் கேட்ட(து) உரைக்கும் 12



மூரிநீர் உடுத்த கண்அகல் ஞாலம்
முழுவதும் புரந்(து)அருள் செய்யும்
சீரியன் தந்தை தாயுடன் பிறந்தார்
சிறந்தநட் பாளர்மற்றுஎ வர்க்கும்
ஏரியல் சிறப்புச் செய்பவ னாநீ
இவன்பொருட்(டு) உடல்விடல் தகாது
பேரியம் முழங்கு நின்நகர்க்(கு) ஏகு
பெட்டது புத்திஅன்(று) இன்னம் 13

சென்றுசென்(று) எங்கும் ஐயம்ஏற்(று) உழன்று
திரிதரும் இனையபார்ப் பானைக்
கொன்றுதின்(று) எனது பசிஒழித் திடுவல்
குறிக்கொளும் இவற்செகுப் பதனால்
கன்றுமுள் கொண்டு வருந்திலார் எவரும்
காவல் அறிமதி எனலும்
நன்றுநன்(று) உரைத்த மொழிஎன நகைத்து
நவிலுவான் மதிக்குலத்(து) அரசன் 14

புல(வு)உணா வேட்டுக் கொலைத்தொழில் ஏற்றுப்
புலைத்தொழில் பூண்(டு)உழல் புலியே
குலவும்என் முன்னும் அச்சம்அற்(று) இவனைக்
கொல்லுவன் என்றனை அன்றோ
பலஉரைத்(து) எவன்நீ உரைத்தசொல் கேட்டும்
பயன்படா(து) இருப்பனேல் எனது
நிலவுவாழ் நாளைச் சுடுதல்வேண் டாவோ
நீஎனை யார்என நினைத்தாய் 15

மருவலர் உடம்பு போழ்ந்(து)உயிர் பருகி
மற்றினும் உளர்கொலோ என்று
துருவிநால் திசையும் இன்மையின் வருந்தித்
துடிதுடித்(து) உறைபுகா(து) உழலும்
பொருவரும் எனது கொற்றவாள் இருந்தால்
பொள்ளென ஒருகணத்(து) உன்னை
வெருவறத் துணிப்பேன் ஐயகோ தெய்வ
விநோதத்தால் அன்னதைக் காணேன் 16

மன்னிய தெய்வத்(து) உறுபெரு வலியே
வலியவாம் எப்புவ னத்தும்
பன்னிய சீவர் முயற்சிமற்(று) எவனாம்
பஞ்சபூ தத்தின்ஆம் உடம்பு
மின்னிய தடித்து நீர்எழும் குமிழி
மேதகப் புனைந்தநீர்க் கோலம்
என்இனி உரைப்பல் இன்றுமாய் தருமோ
இன்(று)எனில் நாளைமாய் தருமோ 17

அன்றியும் அடுத்த தினத்துமாய் தருமோ
ஆயிரம் அரண்இருந் தாலும்
கன்றிய மனத்துக் காலனார் அணுகிக்
கைக்கொளல் தேற்றம்ஈ(து) உணர்தற்(கு)
ஒன்றிய உணர்ச்சி இல்லவர் யானே
உதுசெய்தேன் செய்கின்றேன் செய்வேன்
என்(று)இயம் பிடுவர் இத்தகு மூடர்
இயமனால் தண்டிக்கப் படுவோர் 18

நலமலி அறிவில் மிக்கவர் எந்த
ஞான்றுநற் கருமங்கள் அனைத்தும்
புலமலி தருநிட் காமியம் ஆகப்
புரிந்துமற் றோர்பெறற்(கு) அரிய
வலம்மலி சித்த சுத்திமுன் அடைவர்
மற்றதை அடைந்தவர் சிறிதும்
உலமலி தடந்தோள் நமன்சினம் மருவி
உறும்என அஞ்சுறார் மாதோ 19

மன்னும்அஞ் ஞான மருவும்ஆ வரணம்
வயங்கிமேல் ஆயவிட் சேபம்
பன்னுநூல் உணர்ச்சி பரசிவ உணர்ச்சி
படர்தரு துக்கம்இல் லாமை
என்னும்இவ் ஆறன் மேற்பட விளங்கி
இயைதடை அற்றஆ நந்தம்
முன்னும்உத் தமர்கள் பரோபகா ரத்தை
முயன்(று)செய்(து) அடைவர்எஞ் ஞான்றும் 20

ஆதலின் இந்த அநித்தமாம் உடம்பின்
ஆசைசற்(று) இலைஎனக்(கு) அறிமோ
மேதகஇன்னும் உரைப்ப(து)ஒன்(று) உள(து)இவ்
வேதியன் தனைப்புர வாது
போதரு வேனேல் அரசன்ஆம் தன்மை
போயது பல்உயிர் களையும்
காதலின் பயன்தீர்ந்(து) அளிப்பவன் தனையே
காவலன் என்(று)உல(கு) உரைக்கும் 21

அன்றியும் அரசர் ஆயவர் கரத்தில்
அத்திர சத்திரம் தரித்த(ல்)
துன்றிய துட்ட மாக்களைச் செகுத்துத்
தூயரைப் புரப்பதற்(கு) அன்றோ
என்தனிக் கரத்தில் வாள்இலா மையினால்
இத்துணை நயந்துனக்(கு) உரைத்தேன்
மன்றநீ கிருபை செய்(து)எனைப் புசித்(து)இம்
மறையவன் தனைவிடல் வேண்டும் 22

அறைதல் உண்(டு)இன்னும் கேட்டிவாம் புலியே
அபயம்என்(று) உரைத்தவற்(கு) இரங்கி
நிறையஎன் உடம்பு முழுவதும் புசித்து
நீஅவன் தனைவிடு திறத்தால்
கறைஅறு பாண்டி குலம்புகழ் பெருகக்
கண்டனை பழிமொழி ஒழித்தாய்
குறைஎவன் நினக்(கு)யான் செய்வ(து)என் என்று
கூறவெம் புலிஎடுத்(து) உரைக்கும் 23

மன்னர்மன் னவனே கேட்டிஉன் குடைக்கீழ்
வையகம் வசித்(து)இனி(து) இருக்கப்
பொன்னவன் சமழ்க்கும் மதியுடை அமைச்சர்
புரோகிதர் முதலியோர் இருக்க
மின்நகும் ஓடைச் சலசல மதம்பாய்
வெங்களிற்(று) இனம்பல இருக்கத்
தன்னிகர் உச்சைச் சிரவமும் விளர்க்கத்
தாவுமான் குலங்களும் இருக்க 24

கதிரவன் தேரும் கலங்கிஓட்(டு) எடுக்கும்
கடுவிசைத் தேர்பல இருக்க
அதிர்கழல் விசித்துக் கூற்றொடும் பொருதற்(கு)
அமைந்தவாள் வீரரும் இருக்க
முதிர்ஒளி விரிக்கும் குண்டலம் மதாணி
மோலிகே யூரமும் இருக்க
எதிர்அறு நிதிக்கோன் வறியன்என்(று) இசைப்ப
எண்இல்பொன் மணிமுதல் இருக்க 25

சிலைநுதல் கருங்கண் செய்யவாய் மடவார்
திருவினும் சிறந்தவர் இருக்கக்
கலைபல தெரிந்த சான்றவர் புகழும்
கல்வியும் நிறைந்(து)உளத்(து) இருக்க
அலை(வு)அற எவர்க்கும் முகிலினும் கொடுத்தற்(கு)
அமைந்தகைத் தலங்களும் இருக்க
மலைவளைத்(து) அருளிப் புறம்கடந் தவன்தாள்
வழிபடு பத்தியும் இருக்க 26

யாதுகா ரணத்தால் உயிர்விடத் துணிந்தாய்
இதுநினக்(கு) இசைவ(து) அன்(று)ஐய
போதுசேர் குழலாள் உமைஒரு பாகப்
புண்ணியன் கருணையால் அவனி
மீதுவாழ் தலங்கள் அள(வு)இல அவற்றை
விதிவழி புரப்பவர் எவர்காண்
கோதுதீர் பாண்டிக் குலப்புகழ் அரசே
கோபியா(து) அகறிஎன் றதுவே 27

*( தொடரும்....)*

# மடாலய நிகழ்வுகள்

18.01.2015 அன்று சாது பரமானந்த சுவாமிகள் குருபூஜையும் 2.02.2015 அன்று பள்ளத்தூர் முத்து வீரப்பய்யா குருபூஜையும், 6.02.2015 அன்று மேலமடம் பழநியப்ப ஐயா குருபூஜையும், 11.02.2015 அன்று திருப்புவனம் ஸ்ரீ காசிகானந்த சுவாமிகள் குருபூஜையும் மிகவும் சிறப்பாக நடைபெற்றன. அன்பர்கள் பலர் கலந்து கொண்டனர்.

கோவிலூர் திருமடத்தில் குடிகொண்டு அருள்புரியும் அருளாளர்களுடைய சமாதித் திருக்கோவில்கள் செப்பனிடப்பட்டுள்ளன. அங்கே எழுந்தருளியுள்ள எல்லா மூர்த்தங்களுக்கும் ஆகம முறைப்படி வேள்விகள் செய்து 23.01.2015 அன்று திருமுழுக்காட்டப் பெற்றது. 22.01.2015 அன்று பூர்வாங்க பூஜைகள் நடந்தன. சமாதி கொண்டுள்ள அருளாளர்களின் வாரிசுதாரர்களும் மடாலய அன்பர்களும் கலந்து கொண்டு திருவருளும் குருவருளும் பெற்றனர்.

23.01.2015 அன்று ஸ்ரீலஸ்ரீ முத்துராமலிங்க ஆண்டவர் நர்சரி மற்றும் பிரைமரி பள்ளியின் 2014 -15 ஆம் ஆண்டுக்கான விளையாட்டு விழாப் போட்டிகள் நடைபெற்றன. சீர்வளர்சீர் மெய்யப்ப ஞான தேசிக சுவாமிகள் போட்டிகளைத் தொடங்கி வைத்தார்.

தேவகோட்டைக் கல்வி மாவட்டக் கல்வி அலுவலர் பரிசுகளை வழங்கிச் சிறப்பித்தார்.

24.01.2015 அன்று கோவிலூர் ஆண்டவர் மெட்ரிகுலேசன் மேனிலைப்பள்ளியின் ஐந்தாம் ஆண்டு விளையாட்டுப் போட்டிகள் நடைபெற்றன. சீர்வளர்சீர் மெய்யப்ப ஞான தேசிக சுவாமிகள் விளையாட்டுப் போட்டிகளைத் தொடங்கி வைத்தார். காரைக்குடி SMSV ஆண்கள் மேனிலைப் பள்ளியின் தலைமை ஆசிரியர் பரிசுகளை வழங்கிச் சிறப்பித்தார்.

24.01.2015 அன்று இலக்கியப் பூங்கா நிகழ்வில் காரைக்குடி இராமசாமி தமிழ்க் கல்லூரிப் பேராசிரியர் டாக்டர் இரா. கீதா அரிவாட்டாய நாயனார், ஆனாய நாயனார் குறித்துச் சொற்பொழிவு ஆற்றினார்.

26.01.2015 அன்று குடியரசு தின விழா சிறப்பாக நடைபெற்றது. தேவகோட்டை ஜமீன். திரு. ராமகிருஷ்ணன் தேசியக் கொடியை ஏற்றி வைத்துச் சிறப்புரை ஆற்றினார்.

30.01.2015 அன்று கோவிலூர் ஆண்டவர் மெட்ரிகுலேசன் மேனிலைப் பள்ளியின் ஆறாம் ஆண்டு விழா நடைபெற்றது. கோவிலூர் ஆதீனம் சீர் வளர் சீர் மெய்யப்ப ஞான தேசிக சுவாமிகள் தலைமை தாங்கி ஆசியுரை வழங்கினார்.

அழகப்பா பல்கலைக்கழகக் கல்வி வளர்ச்சிக் குழுமத்தின் முன்னவர் பேராசிரியர் டாக்டர். செந்தில் சிறப்பு விருந்தினராகக் கலந்து கொண்டு பரிசுகளை வழங்கினார்.

31.01.2015 அன்று ஸ்ரீலஸ்ரீ முத்துராமலிங்க ஆண்டவர் மழலையர் மற்றும் தொடக்கப்பள்ளியின் 20ஆவது ஆண்டு விழா நடைபெற்றது. சீர் வளர் சீர் மெய்யப்ப ஞான தேசிக சுவாமிகள் தலைமை ஏற்று ஆசியுரை வழங்கினார். வருவாய்க் கோட்ட அலுவலர் திரு. சிதம்பரம் வாழ்த்துரை வழங்கினார். பள்ளி மாணவ மாணவியரின் கலை நிகழ்ச்சிகள் சிறப்பாக நடைபெற்றன.

3.02.2015 அன்று கோவிலூர் ஆண்டவர் உடற்பயிற்சிக் கல்லூரியின் ஆண்டு விழா சீர் வளர் சீர் மெய்யப்ப ஞான தேசிக சுவாமிகள் தலைமையில் மிகச் சிறப்பாக நடைபெற்றது.

7.02.2015 அன்று நாச்சியப்ப சுவாமிகள் கலை அறிவியல் கல்லூரியின் இரண்டாம் கல்லூரி நாள் விழா நடைபெற்றது. சீர்வளர்சீர் மெய்யப்ப ஞான தேசிக சுவாமிகள் விழாவிற்குத் தலைமை ஏற்று ஆசியுரை வழங்கினார். அழகப்பா பல்கலைக்கழகத் தொலைதூரக் கல்வி இயக்ககத்தின் இயக்குநர் பேராசிரியர் டாக்டர் TR. குருமூர்த்தி சிறப்பு விருந்தினராகக் கலந்து கொண்டார். முன்னதாக ஆங்கிலத்துறைத் தலைவர் V.பாலசந்திரன் அனைவரையும் வரவேற்றார். முதல்வர் டாக்டர் சே. குமரப்பன் ஆண்டறிக்கை வாசித்தளித்தார். நிறைவாகப் பேராசிரியர் சீதாலெட்சுமி நன்றி கூறினார். கலை நிகழ்ச்சிகளை மாணவர்கள் நடத்தினர். நிகழ்ச்சிகளுக்குப் பேராசிரியர்கள் கார்த்திகா, தேவி ஆகியோர் துணை செய்தார்கள். நிகழ்ச்சிகளைப் பேராசிரியர் கலா தொகுத்து வழங்கினார். ஆசிரியர்களுக்கு நினைவுப் பரிசுகள் வழங்கப்பெற்றன.

---

**ஆன்மீக அன்பர்களும் கோவிலூர் மடாலயத்தின் நிகழ்வுகளில் ஆர்வம் கொண்ட பக்தர்களும் திருநெல்லை அம்மன் பெயரில் வெளிவரும் ஆன்மீகத் திங்கள் இதழுக்குச் சந்தா செலுத்தி உறுப்பினராகுமாறு வேண்டுகிறோம்**

**– பதிப்பாசிரியர்**